# பெரிய புராணமும் தமிழர் நாகரிகமும்

[வித்துவான் - மு. இராசாக் கண்ணனார். B. O. L.]

ஓரின மக்களின் நாகரிகத்தை ஆராய்தற்கு முழுத்துணை புரிவன கல்வெட்டுக்கள், செப்பேடு, பட்டயம், காண பம், ஓவியம், சிற்பம், புதைபொருள்கள் இன்ன பிற ஆகும். ஆயினும் கல்வெட்டு செப்பேடு முதலியவற்றின் உள்ளீடாய் நின்றும் வெளிப்படையாகப் பொருளியல்பு களைத் தெளிவாகக் கூறும் தகுதிபெற்றது மொழி இலக்கியமே. ஆகலின் மிகுதியும் மொழி வழிசென்று காண வேண்டியவர்களாயுள்ளோம்.

தமிழ் மக்களின் காகரிகமே உலகத்து வாழும் பல இன மக்களின் அடிப்படை நாகரிகம் என்பது உணரப்பட்டு வலுப்பட்டு முதிர்ந்து வளர்ந்து சிறந்த முன் வருகின்றது. கடைச்சங்க காலத்ததும் அதன் முன்னும் பின்னும் ஆகும் சில நூற்றாண்டுகளில் வாழ்ந்த தமிழர்களின் நாகரிக இயல்பினைத் தெற்றெனப் பலப்படுத்துவன், வாய்மை பொலியும் புலவர்கள் தம் மெய்யுரை யாகும் சங்க இலக்கியங்களாகும். தொடர்ந்து பத்தாம் நூற்றாண்டு வரை தமிழ் நாட்டு மக்கள் இயல்புகளை அறிதற்குத் துணைபுரிவன, சில காவியங்களும் தேவாரம், நாலாயிரம் முதலிய நூல்களும் தமிழ் காட்டலர்ந்து அன்புத் தேனை ஒழுகவிடும் பெரிய புரான நறுமலரும் மற்றைய சில திருமுறை அலர்களும் ஆம்.

புராணம் என்ற பெயரைக் கேட்டவுடன் “சூதர் மாகதருக்குச் சொல்ல அவர்...........'என்பது போன்ற நூல்தானே!" என்றுரைத்து உண்மையை உள்ளத்திருத் தாது நீங்குவர். பெரிய புராணத்தை அவ்வாறு எண்ணுதல் தற்கொலைக்கு நிகர் என்னல் வேண்டும். ஏன்?

இந்நூல் வேற்றின மக்களின் நாகரிக ஒழுங்கை. அறிவிக்கும் வேற்றுமொழி வழி வந்ததன்று. இப்புராணத்திற்கு, முதலும் வழியும் ‘வடவேங்கடம் தென் குமரி' எல்லையுட்பட்டனவே. 'மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும்' ஆதி சைவ அந்தணர் மரபில் தோன்றித் தமிழ் 'நாடு வாழ் அரசர்' இல்லத்தில் வளர்ந்து, 'பதியிலார் குலத்துள் தோன்றிப் பாவையார் என்னும் நாமம்' பெற்ற மங்கையாரையும், வேளாண்மை மிக்க திருஞாயிறு கிழவர் 'திருமகளார் சங்கிலியாரையும் திருமணம் புரிந்த பெருந்தமிழ்ப் பெரியார் திருஆரூரர் அருள் செய்த திருத்தொண்டத்தொகை இதன் முதல் நூல். 'ஆதிசைவ மறையோன் பால் தோன்றி' நம்பி ஆண்டார் நம்பி என்னும் பெயருடன் பொல்லாப் பிள்ளையார் அருளெய்தி, அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத் தேடும் அதுபோல அன்று; இது என்றும் உளதாம்' என்று அப்பிள்ளையாரே தேவாரத் திருமுறைகளின் பெருமையைக் கூறக் கேட்டுணர்ந்து பாடிய அந்தாதி இதற்கு வழி நூல். வேளாண்

தமிழ்க் குடியில் பிறந்து கல்வி கற்று அமைச்சராய்த் தொண்டாற்றிக் கல்வெட்டு ஏடு பட்டயும் ஆம் எல்லாவகையான வரலாற்றுச் சான்று களையும் ஒப்புநோக்கித் தொகுத்து உண்மைகண்ட பின்னர்ச் சேக்கிழார் பாடிய பெரிய புராணம் சார்பு நூல்; எனின் இந்நூல் தமிழர் நாகரிகத்தினைத் தெளிவிக்காது வேறெதனைக் குறிக்க வல்லது?

சமயத்தையே குறித்துத் திகழும் இந்நூலோ நாகரிகத்தைக் குறிப்பது எனச் சிலர் வினவுகின்றனர். சமயத்தின் பயன் என்ன? செயலற்றுத் தொல்லையற்ற ஓய்வில் திளைத்துக் கிடத்தலன்றோ? இந்நாளில் உலகத்தில் ஈடுபடுதலையே முழு நெறியாகக் கொண்டு அரசியலே இறைவன் அடியிணை எனக் கருதி ஈடுபாடுற்று வாழ்வோரும், 'யான் சில நாள் அரசியலிலிருந்து ஓய்வு பெற விரும்புகின்றேன்' என்று அரசியலினின்றும் விலகுவதைக் கேட்கின்றோம்; காண்கின்றோம். இங்கனம் ஓய்வு என்று அவர்கள் கூறுவது யாது? உலகக் கலப்பால் களைத்த அவர் தம் உள்ளம் உலகத் தொடர் பின்றி வாழ விரும்புகின்றது. அவ்வாறு வாழ்வதால் உள்ளம் அமைதியுறும் என்று கருதுகின்றார்கள். அவ்வண்ணம் வாழ்கற்கு இயற்கை அழகு செறிந்த பேரிடங்களுக்குச் செல்கின்றனர். அங்குப் பசிய புல்லையும் பழுத்த மரங்களை யும் பலநிற மலர்களையும் வெண்ணிற நுரையுடன் கலந்து வீழும் நீர் வீழ்ச்சியையும் கண்டு அவற்றிலேயே கருத்தை இருத்தி மகிழ்ந்து அதற்கப்பாலும் எண்ணி இவற்றைப் படைத்த ஆண்டவன் பெருமையே பெருமை என உள்ளம் குளிர்ந்து கண்மூடிப் பேச்சற்று ஓய்ந்து விடுகின்றனர். இவ்வாறு மகிழ்வூட்டும் இயற்கையும் இறைவன் பெருங் கூத்தின் பயனாகும். இறைவன் திருக்கூத்தைக் கண்ட ஆரூரர்'மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்'என்றார் சேக்கிழார். அக்கூத்தினை இயற்கையில் காணுறும் அரசியல் அறிஞரும் மாறிலா மகிழ்ச்சியில் ஆழ்தல் ஒருதலை. மகிழ்ச்சியில் படிந்து கிடத்தற்குக் காரணமாய ஓய்வே சமயத்தின் பயனாகும்.

இந்த ஓய்வு - அமைதி, ஒவ்வொரு உயிரும் அடைய வேண்டிய பயன் உடல் தசை நாரெல்லாம் அசைவுபெறஆடிய பின்னர்ச் 'சும்மா' ஓரிடத்திருத்தலை விரும்புவோரைக் காணுவோர், உலக ஆட்டத்திலேயே கண்ணும் கருத்துமாய் ஆண்டுகள் பல மாண்டொழிய இயைகின்றவர் 'சும்மா' அசைவற்றிருக்க விரும்பா தொழிவரோ? “சும்மா இருத்தலையே' சமயம் கூறுகின்றது. 'சும்மா இரு சொல்லற என்றலுமே, அம்மா பொருளொன்று மறிந்திலனே' எனச் சமயத்தின் பயனைத் தமிழ் நாட்டு அறிஞர் ஒருவர் உரைத் துள்ளார். இச்சீரிய உயிர்ப் பயனைத் தெளிதல் அருமை யினும் அருமை. இதுவே நனி நாகரிகர் காணும் முடிவு. இவ்வருமைப் பெருமை தமிழ் மக்களுடையதென்று கூறவே நாகரிகமலைக் குடுமியின் மேல் நண்ணுதலெனின் பெரியபுராணம் நாகரிகம் கூறும் நூலாகாதோ? ஆம் என்க.

பெரிய புராண ஆசிரியர், சேக்கிழார் காலம் கி..பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது ஒருவாறு விளங்குகின்றது. அவர் காலத்திற்கு முன்னிருந்தனவாகப் பல கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றில் நாயன்மார்களின் வரலாற்று வகைகள் புராணத்திற்குச் சிறிதும் மாறுபாடின்றிக்

காணப்படுகின்றன எனின் பெரியபுராணத்தில் காணப்படும் நாகரிக ஒழுங்கை உண்மை வரலாற்றினை ஒட்டி வந்ததென உறுதியாகக் கொள்ளுதற்கு யாதொரு தடையும் இல்லை.

சீராளதேவர், சிறுத்தொண்ட நம்பி, திருவெண்காட்டு நங்கை என்போரின் குறிப்புக்களை 56 / 1913, 57 / 1913, 'S. T. T. Vol. II 43 என்பவற்றிலும்; சண்டேசுவரர் தம்தந்தையின் குற்றத்தை நீக்கி வாழ வைத்தவர் என்பதையும்- மழுவுடன் திருவுரு உடையார் என்பதையும் S. T. T. Vol. IT29, 55 என்பவற்றிலும்; நம்பி ஆரூரர், நங்கை பரவையார்.திருநாவக்கரையர், திருஞான சம்பந்தடிகள் ஆகியோரை ஒன்றாகக் குறித்திருத்தலை S. I. I. Vol. II 28, 40 என்பவற்றிலும்;'தத்தா நமரேகாண் என்ற மிலாடுடையார் ஒருவர்' என்று மெய்ப்பொருள் நாயனார் குறிக்கப்படுவதை (சேக்கிமார் இவ்வரியைப் பொன்னேபோல் போற்றி,'தத்தா நமர்எனத் தடுத்து வீழ்ந்தார்'என்பது நெஞ்சை உருகச் செய்கின்றது) S. I. I. Vol 11 60 என்பதிலும் திருக்கண்ண ப்பத்தேவர் குறிக்கப்படுவதை 125 / 1922 என்பதிலும் அன்பர்கள் திருத்தொண்டத் தொகை கேட்டனர் என்பதை 137 /1912 என்பதிலும் காண்க. மேலும், சுவரில் மங்கி மறைந்துகிடக்கும் கல்வெட்டுக்கள் பல வெளிவரின் நாயன்மார்கள்வரலாறுகளும் பெரிய புராண வழியே பல வெளிவரும் என்பதைக் கண்டதைக் கொண்டு கூறலாம். ஆதலின் உண்மைவரலாற்று வழி இயங்கும் இப்புராணம் நாகரிகம் காணுதற்குத் தக்கதொரு நூலாகும்.

பெரிய புராண ஆசிரியர் கூறும் திருந்திய கொள்கைகள் பல இக்காலத் தமிழரிடைக் காண முடியாமை வருந்தத் கக்கது. சாதிப்பிரிவு இந்நாளில் அழுந்தி வேரூன்றி நிலைத்து நிற்கின்றது. பெரியபுராணம் தோற்றமளித்தற்குக் கருவியாய்த் திகழும் சுந்தரர், இறைவனை வழிபடும் அந்தணர் குலத்தினர்; ஆயினும் உருத்திர கணிகையர் மரபிலும் வேளாள மரபிலும் மணந்தனர் என்னும் வாய்மையை நோக்குக. திருநாட்டியத்தான்குடியில் வாழ்ந்த வேளாளர்கோட்புலி என்னும் பெரியார் தம் இரு பெண் மக்கள் வனப்பகை சிங்கடி என்பாரை ஏற்றுக்கொண்டருள வேண்டும் என்னும் பொழுது சுந்தரர் மகண்மையாக் கொண்டு 'சிங்கடிஅப்பன்' என்று தாம் பாடிய பதிகத்தில் தம்மைச் சொல்லிக் கொள்ளும் வேறுபாடின்மையைக் காண்க. திருமயிலைவணிக மரபினர் சிவநேசர் தம் அருமை மகள் பூம்பாவையை மறையவர் திருஞானசம்பந்தருக்கென வளர்த்து அவ்வம்மையார் விடத்தினால் வீந்தும் எலும்பைக் குடத்திட்டு வைத்திருந்து அவர்பால் ஒப்புவிக்க அவரும் இறைவன் அருள்கொடு உயிர்ப்பித்தனர். 'அருமையால் அடியேன் பெற்றபாவையைத் திருமணம் புணர்ந்தருள் செயும்' என்றனர் செட்டியார். 'இறைவனருள் கொண்டு மீளப் பிறக்கச் செய்தமையின்' திருமணம் புரிதல் தகுதியன்று என்று பிள்ளையார் மறுக்கின்றதை இந்நிகழ்ச்சிகளால் சாதிக் கட்டுப்பாட்டைத் தகர்த் தொழித்து எவரும் எக்குலத்திலும் மணக்கலாம்; அவ்வாறு மணம் செய்தலே தமிழ் மக்களின் ஆற்றலைப் பெருக்கும் வழி; 'யாயும் யாயும் யாராகியரோ, எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்' என வினவிய சங்க காலமக்கள் ஒழுக்கமே உயர்வு தரும் தகுதியது; எனத் தூய தமிழர் நாகரிகத்தை மட்டும் விளம்புவதன்று பெரியபுராணம்.

இந்நாளில் அந்தணர் மறைவிலிருந் துண்ணலைக் காண்கின்றோம். இவ்வழக்கம் தக்கதன்று என்று பெரிய புராணம் மறுத்துக் காட்டுகின்றது. 'அந்தணரில் மேம்பட்ட அப்பூதி அடிகளார்' இல்லத்தில் நாவரசர் உடனிருந்துண்டார் என்றலும் அந்தண மரபு வழிவந்த சுந்தரர் அரச மரபினராகிய சேரமானைப் பதியிலார் மரபினளாகிய பரவையம்மையின் இல்லத்தில் வரவேற்று கலந்துண்டு மகிழ்ந்தனர் என்னலும் இவை போன்ற நிகழ்ச்சிகள் பலவும் எதனை அறிவிக்கின்றன. கலந்துண்டு வாழ்ந்து வேறுபாட்டை ஒழித்து ஒற்றுமைப்படுதலின் சிறப்பினைத் தூண்டிக் காட்டும் பெரியபுராண ஆசிரியருக்குத் தமிழுலகம் செய்யும் கைம்மாறும் உண்டோ

இந்நாளில், ஒரு கூட்டத்தினர் தீண்டுதற்குத் தக்கோரல்லர் என்று ஒதுக்கப்பட அதனால் புறச் சமய வளர்ச்சியம் அரசியலில் சில தொல்லைகளும் விளைந்து துன்பம் மிகுதலைக் காண்கின்றோம். இச்சிக்கலையும் சேக்கிழார் பெரியார் அமைச்சருக்குள்ள அரசியலில் மதி நுட்பத்துடன் கண்டு தீர்த்து வைத்திருக்கின்றனர்.

தீண்டாதார் மரபில் வந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் அன்பர்களுடன் திருஆலவாய்க் கோயிலில் சென்று வணங்கினார்; திருஞானசம்பந்தப் பிள்ளையாருடன் திருஆரூர்க்கோயிலில் இறைவனை வணங்கினார்; திருச்சாத்த மங்கைக்கு வந்த போது திருநீலநக்கர் என்ற அந்தணர் இல்லில் (நடுமனைவேதியின் பாங்கர்' இருக்க இடம் தந்தனர். வேதியில் இருந்த செந்தீபாணர் இல்லத்துள் வருதல் வேண்டியதே என்று அறிவிப்பதே போல் வலஞ் சுழித்துக் கிளர்ந்து மகிழ்ந்தது; சம்பந்தப் பிள்ளையார் பாண பிளளையார் பாணரை நோக்கி. 'ஐயரே! நீர்' எனவும் 'ஐயரே !' எனவும் அழைத்தனர்; விழாவில் கலந்து கொண்ட நமிநந்தியடிகள் என்ற பெரியார் பலர் உடல் மேல்பட்டமையின் 'தீட்டு' ஆயது எனக் கருதிக் குளித்த பின்னர்ப் பூசை செய்ய எண்ணி ஒருபுறத்தயர இறைவன் அவர் கனவில் தோன்றி எல்லோரும் என் கணம்' என்றுரைக்க விழித்த அடிகள் உண்மை உணர்ந்து 'தீட்டு' என்பதை மறந்தார்; என இவ்வண்ணம் பல இடங்களில் தீண்டாமை எனும் பெரிய 'மை' (குற்றம்) ஒழிதற்குப் பெருநிலையில் பாடுபட்டுள்ளது பெரியபுராணம்.

சாதிப்பிரிவும் தீண்டாமையும் தமிழ் மக்களை நூற்றுக் கணக்கான பெரும் பிரிவுகட்கு இலக்காக்கித் தமிழ்நாட்டின் ஒற்றுமையையும் ஒழுங்கையும் குலைத்துத் திரித்துச் சிதறடிக்கின்றது. தமிழ் மக்கள் பெரிய புராணகாலத்தில் இவற்றை நெகிழ விட்டிருந்தனர் எனக் காண்கின்றோம். எல்லோரும் ஒருகுலம் என வாழ்ந்த இந்நாட்டுமக்கள் வேற்றின மக்கள் விரவுதலால் வேறுபடக்கண்ட சேக்கிழார் அவ்வேறுபாட்டுணர்வைப் போக்குதற்கு வரலாற்று வழிப் புராணத்தை வகுத்துத் தந்தருளியுள்ளார். இத்தகைய மாக்கதை இன்று சீர்திருத்தச் செயலில் ஈடுபடும் அறிவு பெற்றோர்க் கெல்லாம் ஆக்கம் தந்து வழிகாட்டியாக விளங்குகின்றது. சீர்திருத்தம் என நாவால் பேசி ஓய்ந்து உண்டு உறங்கும் ஒழுக்கம்மிக்கோர் புராணம் அறிவுறுத்தியுள்ள அறிவு நெறியைப் பின்பற்றி இச்செந்தமிழ் நாட்டுச் செயற்குரிய திருத்தங்களைச் செய்யின் புராணம் பாடியமா

பெருந் தமிழ்ப் பெரியார் சேக்கிழார் வழிவழி வந்த தமிழ்மரபில் பிறந்தவர்களாகின்றார்கள்.

தமிழர் நாகரிகம் எனும் தலைப்பின்கீழ் அரசியல், அமைச்சியல், குடி இயல், போர்முறை, நீதி வழங்கிய நெறி, சிற்பக்கலை, ஓவியக் கலை, பாட்டுக் கலை, மருத்துவக் கலை, பொருள்நிலை, பொருளை ஆக்கும் நெறி, இன்ப நெறி, நடையுடை,உணவு நிலை, இயற்கையைத் துய்த்த வழி, பெண் மக்களுக்கிருந்த தகுதி நிலை, தமிழைப் போற்றிய செந்நெறி, தமிழ்க்கலை பிற எனும் பல உள்தலைப்புக்களில் விரிவாகக் காணுதற்குறித்து சுருங்கிய அளவான் பெரிய புராணம் வெறும்புராணம் என மதித்தலாகாது என்பதைக் குறிப்பிடலே இக்கட்டுரையின் முழுநோக்கம்.

தொகுக்கப்பட்ட தலைப்புக்களின் கீழோ அன்றி வேறுவகைப் பிரிவுகளின் வழியோபுராணத்தைப் படித்துப் பயனடைவோரோ இந் நாட்டுப்பிறந்த மக்கட் பிறப்பால் அடைய வேண்டிய பயனை அடைந்தோராவர்.

சித்தாந்தம் - 1943 ௵ - மார்ச்சு / ஜூன் ௴